யஜுர்வேத

# கடோபநிஷத்து

## அத்தியாயம் - 1 - வல்லி - 1 - மந்திரம் - 1.

1. வாஜசிரவசன் * (விசுவஜித் என்னும் யாகபலத்தை) இச்சித்தவனாய்ச் சகலதனத்தையும் (ரித்விக்குகளுக்குக்) கொடுத்தான். அவனுக்கு நசிகேதன் எனப்பெயருள்ள புத்திரெனொருவனிருந்தான்.

* வாஜமெனில் அன்னம், சிரவாயெனில் கீர்த்தி. எவனுக்கு அன்னதானத்தால் கீர்த்தியுண்டாகிறதோ அவன் வாஜசிரவசன்.

2. தட்சணைகளாகப் (பசுக்களைப்) பிரித்துக் கொடுக்கையில் வாலிபனாக விருக்கிற அந்த நசிகேதசக்கு ஆஸ்திகபுத்தி † பிரவேசித்தது, அவன் (பின்வருமாறு) நினைத்தான்.

† ஆஸ்திக புத்தியாவது தமது பிதாவினுக்கு நன்மையுண்டாக வேண்டுமெனும் புத்தி.

3. ஜலபானம் செய்யவும், புல்லைக்கடிக்கவும், பாலைக் கறக்கவும், கர்ப்பந்தரிக்கவும் சக்தியற்ற (எப்பசுக்களோ) அவைகளை (எவன் தட்சணையாகக்) கொடுக்கிறானோ அவன் சுகத்தைக் கொடுக்காத உலகங்களாகிய அவைகளையடைகிறான்.

4. (தந்தையால் கொடுக்கப்படும் தட்சணை தகுதியானவையல்லவென நினைத்துத் தந்தையை நோக்கி நசிகேதசு) பிதாவே! எவன் பொருட்டு என்னைத் (தட்சணையாகக்) கொடுக்கப்போகிறீர் என்று தகப்பனாரை மூன்றுதரம் கேட்டான். (தந்தை கோபங்கொண்டு) உன்னை யமனுக்குக் கொடுக்கிறேனென்று அவனுக்குச் சொன்னான்.

5. (யமனுடைய சீடர்கள்) அனேகருக்குள் (நான்) முக்கியனாவேன் (அல்லது) மத்தியனாவேன். (பாலியனாகிய) என்னால் எமன் எதைச் செய்துகொள்ளப்போகிறான். (என்னால்) எமனுக்குச் செய்ய வேண்டிய தென்னவிருக்கிறது (எனநினைத்தான்.)

6. (கோபத்தாற் சொல்லிவிட்ட பிதாவை நசிகேதசுநோக்கி) முன்னோர்கள் எப்படி நடந்தார்களோ? ஆலோசித்துப்பாரும், இப்போதிருக்கிற சாதுக்கள் எப்படி நடந்து

கொள்ளுகிறார்களோ? அதையும் ஆலோசியும், மனிதன் பயிர் போல மரணமடைகிறான், மறுபடியும் பயிர்போலப் பிறக்கிறான் என்றான். *

* தமது தந்தை தன்னை எமனுக்குக் கொடுப்பதாகச் சொல்லிய வார்த்தையில் தவறாதிருக்கும்படி இங்கனம் சொல்லினன்.

7. (தந்தையின் கட்டளையின்படி நசிகேதசு எமன் வீட்டிற்குப்போக எமன் மனைவி சொல்லுகிறாள்) பிராமணன் அக்கினிபோல அதிதியாக வீட்டிற் பிரவேசிக்கிறான். யமனே! அக்கினுக்கு இந்தச் சாந்தியைச் சாதுக்கள் செய்கிறார்கள். ஆகையால் நசிகேதசின் காலலம்பவேண்டி) ஜலத்தைக் கொண்டுவாரும். †

† நசிகேதசு யமலோகம் போக, அக்காலத்தில் யமன் வீட்டிலில்லா திருந்த தனால் தனித்திருந்த அவன் மனைவியின் அதிதி பூஜையைக்கிரகிக்காது மூன்று நாள் பட்டினியாக விருந்தான், எமன்வந்தபின் அவன் மனைவி இங்ஙனம் சொல்லினள்.

8. (எமன் தெரிந்து கொண்டு) அற்பபுத்தியுள்ள எந்தப் புருஷனுடைய வீட்டில் பிராமணன் போஜனம் செய்யாமல் வாசம் செய்கிறானோ (அவ்வீட்டையுடையவனுக்கு) இச்சை சங்கற்பங்கள், சாதுக்களின் சேர்க்கை, பிரியமான வார்த்தையாக முதலிய கர்மம், நல்ல காரியம், பிள்ளைகள், பசுக்கள் இவைகளையெல்லாம் (அப்பிராமணன்) நீக்கிவிடுவான்.

9. நமஸ்காரத்திற்கு யோக்கியனான ஒ நசிகேதசே! எந்தக்காரணத்தால் என்னுடைய வீட்டில் அதிதியாக மூன்று இராத்திரி சாப்பிடாமல் வசித்தாயோ? அதனால் உனக்கு நமஸ்காரம் இருக்கட்டும். தோஷத்தினின்றும் (விடுபட்டுச்) சுபமெனக்குண்டாகட்டும்.

10. ஒ யமனே! கௌதம கோத்திரத்தில் வந்த என் தகப்பன், என்னைக்குறித்துச் சாந்தியுடையவராயும், தெளிவான மனமுடையவராயும், கோபமற்றவராயும் எப்படி ஆவரோ? (அப்படி செய்யும்) என்னை உம்மால் அனுப்பப்பட்ட பின் பிரீதியுடையவராக அவர் பேசட்டும். இதனை (நான் கேட்கும்) மூன்றுவரங்களில் முதலாவதாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

11. என்னுடைய அனுக்கிரகம் பெற்றவனாய், என்னிடமிருந்து (நீ) விடுபட்டபின், உத்தாலகனுக்கும் ஆருணிக்கும் பிறந்த பிள்ளையாகிய உன் பிதா உன்னைப்பார்த்துக் கோபமற்றவனாய் இனிவரும் இரவுகளில் சுகமாகத் தூங்குவான்.

12. (யமனே!) சுவர்க்கலோகத்தில் நோய் நிமித்தமான பயம் சிறிது மில்லை. அவ்விடத்தில் நீர் இல்லை, அதில் (யாரும்) கிழத்தனத்தால் பயப்படுகிறதில்லை, பசிதாகம் இரண்டையுங் கடந்து சுவர்க லோகத்தில் ஆனந்தப்படுகிறார்கள்.

13. சுவர்கலோகத்தையடைய சாதகமான அக்னியைப் பிரசித் தமான நீர் அறிவீர், ஓயமனே! சிரத்தையுடன் கூடின வெனக்கு (அதைச்) சொல்லும், சுவர்கலோகத்தினர் முத்தியை எந்த அக்னி ஞானத்தா லடைகிறார்களோ? (அந்த வக்கினியைப்பற்றி) இரண்டாவது வரத்தால் கேட்டுக்கொள்ளுகிறேன்.

14. ஒரு நசிகேதசே! சுவர்கசாதனமான அக்னி * ஞானத்தை நான் அறிந்தவனாய் உனக்குச் சொல்லுகிறேன். அதை என்னுடைய வார்த்தையினின்றும் தெரிந்துகொள், அநந்த லோகப்ராப்திக்கு (நித்தியலோகத்திற்குச்) † சாதனமாயும், திரும்பிவராமைக்கு ஏதுவாயும், இருதயகுகையிலிருப்பதுமான இந்த அக்னியை நீயறி.

---

* அக்னி ஞானத்தைச் சொர்கசாதனமாகக்கூறி, புருஷன் போஜனம் செய்யும் வஸ்துக்களை அவ்வக்கினி பாகஞ்செய்கிறபடியால், அவ்வக்கினி இரு தய குகையிலிருக்கிறானென்று இங்குக்கூறியிருக்கவும், இருதயகுகையில் என் றதனாலேயே அவ்வக்கினி விஷ்ணுவே யெனவெழுதி மூல சுலோகத்தினு ரையை மத்துவாசிரிய ரிடர்ப்படுத்தியலைத்தனர். இவருமை மணம்பெருமாறு எங்ஙனம்?

யோகதத்வோபநிஷத்தானது "ஸ்மாந்நாராயணம் தேவம் சதுர்ப்பாஹும் கீரீடிநம், சுத்தஸ்படிக ஸங்காசம் பீதவாஸஸ ஸமச்யுதம், தாரயேத்பஞ்சகடி காஸ்ஸர்வபாபை: ப்ரமுச்யதே, ததோஜலாத்பயம் நாஸ்தி" என விஷ்ணு மூர்த்தி ஜலதத்துவதேவதை யென்றும்; "தர்யக்ஷந்து வாதம்ருத்ரம் தருணாதித் யஸந்நிபம், பஸ்மோத் தூளி தாஸர்வாங்கம் ஸுப்ரஸந்தமமநுஸ்மாந், தார யேத்பஞ்சகடிகா வந்ஹிநாஸௌந்தஸ்யதே"" என உருத்திர மூர்த்தி அக்னி தத்துவதேவதை எனவும் பரிஷ்கரித்து விட்டபடியால், இவருரை தடுமாற்ற முடையதாம். அன்றியும், "ருத்ரோவா எஷயதக்னி;" எனவும்,' இமம்பசும் பசுபதேதே அத்ய பத்நாம் யக்கே ஹீக்ருதஸ்யமத்யே" எனவும் வரும் சுருதி வாக்கியங்கள் இவருரைபை அநாதரணீயமாக வொதுக்கிருத்திரமூர்த்தியே அக்கினி சொரூப னென்பதை ஆதரணீயமாக்கின.

† அநந்தலோக மென்பது நித்தியலோக மாகையால், இந்தலோகம் விஷ் ணுவுக்கேயுரியதென இராமாநுஜரும், மத்துவரும் எழுதிவைத்தனர். நித் தியலோகமானது நித்தியனாற்கிடைப்பதன்றி, அநித்தியனாற் கிடைப்பதன் றென வேதமுணர்ந்தோர் விளம்புவர். "ப்ரம்ஹாவிஷ்ணுச்ச ருத்ரச்ச, ஸர்வே வாபூதஜாதய: நாசமேவர் நுதாவந்தி" எனத் திரிமூர்த்திகளும் பிறந்தார்கள் இறந்தார்கள் என வெளிப்பட்டமையின் இவர்க்குரிய உலகங்கள் அநித்திய மேயாம். அன்றியும் அதர்வசி

கோபநிஷத்து "நகாரணம்" என மூவரையும் பிரதிஷேதித்து "காரணந்துத்தேயச்சம்பு:" எனப் பூஷித்தமையின் சிவபெருமானுலகே நித்தியமென்பது பசுமரத்தாணியாம்.

15 உலகங்கட்கு ஆதியான அவ்வக்னியையும், யஞ்ஞ வேதிக்கு உபயோகமான இஷ்டிகளையும் ‡ எண்ணிக்கையையும், அதில் அக்னி தரிக்க வேண்டிய விதத்தையும் யமன் நசிகேதசுக்குச் சொன்னான். அந்த நசிகேதசும் கேட்ட எல்லாவற்றையும் எமனுக்கு அனுவாதித்துச் சொன்னான், பிறகு யமன் சந்தோஷமடைந்து மறுபடியும் சொல்லுகிறான்.

‡ இஷ்டிகள் = செங்கற்கள். இவற்றின் எண்ணிக்கை 360 எனவும், 1080 எனவும் பாஷ்யங்களிற் கூறப்பட்டுள்ளன. இக்கற்களைக் கொண்டு அக்கினி வளர்க்க யஞ்ஞவேதிகட்டுவது.

**16.** சந்தோஷமடைந்தவனாயும், நல்லமனமுடையவனாயு மிருக்கிற (யமன்) இப்போதிவ்விடத்தில் மறுபடியும் வரத்தையுனக்குக் கொடுக்கிறேன் (என! நசிகேதசுக்குச் சொன்னான், இந்த அக்கினி (**காசிகேதாக்னி** என்கிற) உன்னுடைய பெயரினாலேயே பிரசித்தமாகட்டும், விசித்திர ரூபமான இந்த இரத்தின மாலையை பேற்றுக்கொள். (என்றனன்.)

**17.** நாசிகேதாக்னியை (ரிக், யஜுஸ், சாமம் என்கிற வேதங்களுடன்) மூன்று தடவையனுஷ்டித்து (மாதா, பிதா, குரு என்னும்) மூன்று பெயர்களின் சம்பந்தத்தை யடைந்து, (யஞ்ஞும், தானம், தபசுஎனும்) மூன்று கர்மங்களைச் செய்கிறவன் ஜனனமரணங்களைக் கடக்கிறான். பிரமனிட முண்டானவனாயும், தேவனாயும், தோத்திரிக் கத்தக்கவனாயு மிருக்கிற அக்னியை அறிந்து பார்த்து இந்தச் சாந்தியை அதிகமாக வடைகிறான்.

**18.** முன் சொன்னபடி திரிநாசிகேதபுருஷன் இந்தக் (கற்க ளின் சொரூபம், அவைகளின் சங்கியை, அவைகளிலக்கினிதரிக்கும் விதம்) மூன்றையும் தெரிந்து கொண்டு இப்பிரகாரமக்னியை யறிந்தவனாய் எவன் நாசிகேதாக்கினியைச் செய்கிறானோ? அவன் இராகது வேஷ முதலியவற்றைச் சரீரவியோகத்திற்கு முன்னமே நீங்கிமானச துக்கரகிதனாய்ச் சுவர்கலோகத்தை * யடைகிறான்.

* "ஸ்வர்க்கலோகா வமிர்தத்வம் பஜந்தே " என்னும் வாக்கியத்தால், ஈண் இக்குறித்த சுவர்க்கலோகமானது மோக்ஷலோகத்தைக் கூறுவதென்றார் இரா மாநுஜரும், மத்துவரும் இஃதுண்மையே. ஆனால் இம்மோட்சலோகம் வைகுண்டமென்று அவர்கள் கூறியது சுருதியிற்காணாத சூசனமாம். எங்கன மெனின்? "ஸப்தம்யாம் வைஷ்ணவம்பதம்" என ஊர்த்துவலோக சுவர்க்கங் களில் ஏழாவதாகவுள்ளது வைகுண்டமெனும் விஷ்ணுபதமென நாதபிந்தூப நிஷத்தும்," நப்டஹ்மலோகோ

வைகுண்டம் நகைலாசம் நசாந்யதா" என வைகுண்டத்தைப் பிரகிருதிசம்பந்தமாக்கித் தேஜோபிந்தூப ஷெத்தும்ஒதுக் கின. இதில் கைலாசமு மிருக்கிறதேயெனின்? அது பிரகிருதி சம்பந்தமான தேயன்றி அப்பிராகிருத கைலாசமன்று. இங்ஙனம் வைகுண்டத்தையும் கூறுதலடாதோவெனின்? விஷ்ணு பிரகிருதிவாஸ ஜீவனெனவும், பசுவென வும்'நகாரண" சப்தத்தால் அதர்வசி கோப நிஷத்துத் தீர்மானித்து விட்ட மையின் இவருலகம் அப்பிராகிருதமாவ தெங்கனம்? ஈண்டுக்குறித்த சுவர்க்க சப்தத்திற்கு பொருள் அப்ராகிருத சிவகயிலாசமே யாமென்பது சாமஞ்ஜசமாம். தொகுதி - 3 - பகுதி. 12, பக்கம் - 309 ல் குறிப்பினையும் கவனிக்க.

---

**19.** நாசிகேதசே! சுவர்கசம்பந்தமான இந்த அக்னிவரமானது உனக்குக் (கொடுக்கப்பட்டது) இந்த அக்னியை ஜனங்கள் உன்னுடைய (பேராலேயே) சொல்லப்போகிறார்கள், மூன்றாவது வரத்தைக் கேட்டுக்கொள்.

**20.** (யமனே!) மரணமடைந்த மனிதன் விஷயத்தில் சிலர் இந்த ஆத்மா விருக்கிறதென்றும், சிலரிருக்கவில்லை யென்றும் (சொல்லுகிறார்கள்) இந்தச் சந்தேக மெதுவோ அதை நீயுணர்த்த யானறிய விரும்புகிறேன் நான் கேட்கும் வரங்களுக்குள் இது மூன்றாவதுவரம்.

**21.** ஓ நசிகேதசே! இவ்விஷயத்தில் தேவதைகளாலும் பூர்வகாலத்தில் சம்சயிக்கப்பட்டது, இது சுலபாமகத் தெரிந்து கொள்ளத்தக்கதல்ல, இத்தர்மம் சூட்சுமமானது, வேறான வரத்தைக் கேட்டுக் கொள், என்னை நிர்ப்பந்தம் செய்ய வேண்டாம், என்பொருட்டு இவ்வரத்தை விட்டுவிடு.

**22.** ஓ யமனே! இவ்விஷயத்தில் தேவதைகளாலுங் கூடச் சந்தேகிக்கப் பட்டிருப்பது உண்மையல்லவா? நீரும் இது செவ்வையாக அறி யத்தக்க தல்லவென்று சொன்னீர்? (அக்காரணத்தால்) இத்தத்துவத்தைச் சொல்லுகிறவன் உமக்குச் சமானமான வேறொருவன் அகப்படான், (நான் கேட்ட) இவ்வரத்தினுக்குச் சமானமான வரம் வேறொன்றுமில்லை.

**23.** ஓ நசிகேதசே! நீ கேட்டவரத்திற்குச் சமானமான வேறொன்று நினைத்தால் கேட்டுக்கொள், தனத்தையும் தீர்க்காயுளையும் கேட்டுக்கொள், விஸ்தாரமான பூமியில் நீ இராஜாவாகப்பிற, இச்சிக்கக் கூடிய வஸ்துக்களுக்குள் இச்சையடைந்தவனாகச் செய்கிறேன்.

**24.** விஸ்தாரமான இராச்சியத்தைக் கேட்டுக்கொள், நீயும் எத்தனை வருடங்கள் ஜீவிக்க விச்சிக்கிறாயோ அதுவரையில் ஜீவிப்பாயாக, நூறு வருடம் ஜீவிக்கும்படியான புத்திரர்கள் பௌத்திரர்கள் மாடுகள் யானைகள் குதிரைகள் சுவர்ணம் பூமண்டலாதிபத்தியம் இவைகளைக் கேட்டுக்கொள்.

25. ஓ நசிகேதசே! எந்தெந்த விச்சைகள் மனிதலோகத்தில் அடையத்தகாதவையோ (அந்தச்) சமஸ்தமான இச்சைகளையும் இஷ்டப்பிரகாரம் கேட்டுக்கொள். (அன்றியும்) இரமணீயமான வர்களாயும் இரதம் வாத்தியங்களோடு கூடினவராயுமுள்ள அப்ஸரஸ்திரீகள் மனிதர்களால் அடையத் தகாதவர்கள், என்னால் கொடுக்கப்பட்ட இம்மாதர்கள் உனக்குச் சுசுருஷை செய்ய வைத்துக்கொள், மரணத்தைக்கேட்க (நீ) அருகனல்ல.

26. ஓ யமனே! மனிதனுடைய சகலவித்திரியங்களுடன் யாதொரு தேஜசுண்டோ அவை குறைந்துவிடுகின்றன. சமஸ்தமான ஆயுளும் அற்பமே, உம்முடைய இரதங்கள் நாட்டிய கானங்கள் உமக்கே யிருக்கட்டும்.

27. உம்மைப் பார்த்தோமானால் தனத்தையடைவோம், நீர் எதுவரையில் யமபதவியி லிருக்கிறீரோ (அதுவரையில்) ஜீவிக்கிறோம், எனக்குப் பிரார்த்திக்கத் தகுந்த வரமோவெனில் நான் கேட்டதுவே

28. ஆயுளின் குறைவையடையாத தேவதைகளின் சமீபத்தையடைந்த மனிதன் ஜனன மரணங்களுடன் கூடின புத்திரன் முதலானவர்களை எங்கனம் பிரார்த்திப்பான், எந்தவிவேகி கிரீடையாகிய சுகங்களை வெகுகாலம் நீடித்திருப்பதாக நினைப்பான், அதிதீர்க்கமான ஆயுள் விஷயத்தில் ஆசைகொள்வான்.

29. ஆத்மா உண்டா இல்லையாவெனச் சந்தேகிக்கிற இந்தப் பெரிதான பரலோக விஷயத்தில் எது நிச்சயமோ அதனை எங்கட்குச் சொல்லும். மிகவும் சூட்சுமமான இந்த ஆத்மசம்பந்தமாக அடைய தக்க வரத்தை விட நசிகேதசாகிய (நான் வேறு) கேட்பதில்லை.

## 1 - வது அத்தியாயம் 2 - வது வல்லி 1 - வது மந்திரம்.

1. மோட்ச சாதனம் வேறு, போக சாதனம் வேறு, இவ்விரண்டும் வெவ்வேறு பிரயோசன முள்ளவைகளாய்ப் புருஷனைக் கட்டுப்படுத்து கின்றன. அவைகளுக்குள் மோட்ச பிரயத்தனம் செய்கிறவனுக்குச் சுபமுண்டாகிறது, எவன் போகசாதனம் விரும்புவானோ அவன் புருஷார்த்தத்தினின்றும் விலகிப்போகிறான்.

2. மோட்ச சாதனமும் போகசாதனமும் மனிதனை யடைகின்றன. புத்திசாலியானவன் அவைகளை நன்காலோகித்து வேறுபடுத்துகிறான் : புத்திசாலி. போகசாதனத்தைக் காட்டிலும் சிரேஷ்டமான மோட்சசாதனத்தை விரும்புகிறான். மந்தபுத்தியுள்ளவன் யோகக்ஷேம மத்திற்காகப் போகசாதனத்தை விரும்புகிறான்.

3. ஓ நசிகேதசே! நீ (என்னால் கொடுக்கப்பட்ட) அந்தப் பிரியமாயுள்ள ஸ்திரீ முதலிய போகங்களையும் ஆலோசித்தவனாய் விலக்கிவிட்டாய். எதில் அனேக மனிதர்கள் முழுகினார்களோ (இச்சிக்கிறார் களோ அந்த) தனமான மாலையை நீ அடையவில்லை.

4. அவித்தை யென்றும், எது வித்தை யென்றும் தெரிந்து கொள் ளப்பட்டிருக்கிறதோ இவ்விரண்டும் தூரமாய் விபரீதமாய் வெவ்வேறாகின்றன. நசிகேதசு வித்தையைக் கோருகிறவனாக நினைக்கிறேன். அனேக விச்சைகள் உன்னை யாசைப்படும்படி செய்யவில்லை.

5. தாங்களே புத்திமான்களாகவும், தாங்களே பண்டிதர்களாகவும் நினைத்துத் தீயமார்க்கத்தில் பிரவேசிக்கிற அவிவேகிகள், எங்கனம் குருடனாலே கடத்தப்பட்ட குருடர்கள் பிரமிக்கிறார்களோ அங்ஙனம் பிரமிக்கிறார்கள்.

6. கலக்கமான மனதையுடையவனாயும், விஷயவாசை யுடையவனாயுமுள்ள மூடனாகிய பாலனுக்குப் பரலோகம் விளங்குவதில்லை, இவ்வுலகமே யிருக்கிறது, பரலோக மில்லையென்று நினைக்கிறவன் அடிக்கடி என்வசத்தை (யமலோகத்தை) யடைகிறான்.

7. அனேகர் கேட்டிருந்தாலும் எந்தப் (பா) மாத்மாவை அறியவில்லையோ அந்தப் பரமாத்மாவை பறித்து விவகரிப்பவன் அரிது, அவனையடைகிற நிபுணன் அரிது, நிபுணனா லுபதேசிக்கப்பட்டு அவனையறிகிறவனுமரிது.

8. அனேகமான சிந்தையை யுடைய பிராகிருத மனிதனால் * இந்தப் பரமாத்மா நன்றாய்த் தெரிந்து கொள்ளத்தக்கவனல்ல, அன ன்னிய பாவனை யுடையவனால் உபதேசிக்கப்பட்ட பரமாத்மா விஷய த்தில் அனேக சிந்தனை யுண்டாவதில்லை, அப்பரமாத்மா அணுவினு மணுவானது, தர்க்கத்தாலூகிக்கத்தகாதது.

---

* "அவரேணாரேண" (பிராகிருத மனிதனால்) என்றதில் அவர சிவன் முதலானவர்களைவிட பகவான் சிரேஷ்டன், பகவானை உத்தேசித்துச் சிவன் முதலானவர்கள் அவரவர்கள் (பிராகிருதர்கள்) 'நரேண = சைவ பிரம்ம காணாபத்திய முதலிய மனிதர்களால்'எனவியாக்கியானம் மத்துவாசாரியர் வரைந்தனர். இவர் வேதவாராய்ச்சி செய்யாதவாராய், இராமாநுஜ பாஷ்யத் தையே படித்து அதில் சிலவரிகளைக் கூட்டியும் கழித்தும் சுருக்கியும் பெரு க்கியு மெழுதித் தாமுமொரு பாஷ்யகாரராக வெளிவந்தவரெனத் தெரியவரு கிறது, இவரது துலவத கொள்கையை விசாரித்து அதுவேதபாகியமெனப் பகவத்கீதார்த்த பங்கத்தில்" தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

நிற்க, "நமஸ்தேரு த்ரமன்யவே" என எஜுர்வேதமும், " நமோருத்ர மன்யவே " எனருக் வேதமும், "ருத்ராயதேநம: "என்ஸாமவேதமும், "ருத்ரா யஸ்தருக்ராய" என அதர்வணவேதமும், "காரணந்துத்தேயச்சம்பு" என அதர்வ சிகோபநிஷத்தும்," அத்வைதம் சதுர்த்தம்ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரா தீத மேகமாசாஸ்யம் பக்வந்தக்சிவம்" எனப் பஸ்மஜாபாலோப நிஷத்தும் இன்னும் ஆயிரங்கணக்கான சைவவிஜய துவஜங்களை யேந்தி விளங்கும் வேதம் கொண்டாடி மகிழும் சிவபரஞ்சுடரை அவரன் (பிராகிருதன்) எனவும்,

"தியாதா' எனவும்," நகாரணம்" எனவும், 'வாசுதேவா ப்ரக்ருதி" எனவம்; "ப்ரஹ்மவிஷ்ணவீ சாகேந்த்ராதீநாம் நாமரூபத்வாரா ஸதூ லோஹமித்யத்யாஸவசாஜ்ஜீவ:" எனவும், "ப்ரகிருதி: பாமோவிஷ்ணு:" எனவும், "யோநிஜனார்தநா!" எனவும், 'விஸ்வம்நாராயண:" எனவும் கூறி வேதத்தால் தீர்மானித்தபிராகிருத மூர்த்தியைப்பகவானெனவும் சுருதிவிருத்த மாகமத்துவாசாரியர் எழுதிவைத்த அசத்துரை வைதிகசதசில் துச்சமாமே ன்பதிற்றடையென்னை?

அன்றியும் அம்மந்திரத்தின் குறிப்பில் சைவன் முதலானவர்கள் மித்தியா ஞானிகளென்றனர். அதர்வசிகையால் "தியேயர்" என்று கொண்டாடப்படுகிற மூர்த்தியை உபாசிக்கிறவர்கள் மித்தையா ஞானிகளோ? அல்லது தியாதா" வென நாராயணோபநிஷத்துத் தீர்மானித்தமூர்த்தியை உபாசிக்கிறவர்கள் மித்தையா ஞானிகளோ? என வேதவித்துகளே தீர்வு செய்யக்கடவர்.

---

9. பிரியமான நசிகேதசே! எப்புத்தியை யேடைந்தாயோ இந்த ஞானம் யுக்தியா லடையத்தக்கதல்ல, அந்நிய வாச்சாரியனால் சொல்லப்பட்ட நல்ல ஞானத்தா லுண்டாவது, (நீ) சத்தியமுள்ள தைரியவானாகவாகிறாய், இஃதாச்சரியம், ஓ நசிகேதசே! உன்னைப் போன்ற சிஷ்யன் எங்கட்குண்டாகட்டும்.

10. நிதி முதலிய நித்தியமல்லவென்று நான் அறிகிறேன், அநித் திய திரவியங்களால் நித்தியமான அப்பரமாத்மா அடையப்படுவ தில்லை, நசிகேதசு அக்னியானது (பிரமசாதனமாக) நித்யமல்லாத திரவியங்களால் நிறைவேற்றப் பட்டிருக்கிறது, அதனால் நான் நித்தி யத்தை யடைந்தேன்.

11. ஓ நசிகேதசே! இச்சையின் பிராப்தியாயும், உலகத்தின் பிரதிஷ்டையாயும், உபாசனையின் பலனாயும், அந்த மில்லாததாயும், பய மற்ற எல்லையாயும், துதிக்கத்தக்கதாயும், விஸ்தீரண கதியுள்ள துமான பரமாத்மாவைப் பார்த்து, ஞானமுள்ளவனாய், தைரியத்தினால் (யாவையும்) விலக்கி விட்டனை.

12. அறிஞானவன் அத்தியான்மயோக † வாயிலாகக் காண்டற் கரியவரும். மறைவினரும், கூடப் பிரவேசித்தவரும், குகைக்குள் மறைந்தவரும், குகைக்கண்

ணமர்ந்தவரும், பழையருமாகிய தேவனை அறிந்தின்ப துன்பத்தினின்று வீடுகிறுகின்றனன்.

† அத்தியாத்மயோகம் என்பது உபநிடங்களில் பாசுபதவிரதம் சிரோவி ரதம் விரஜா தீட்சை எனவும், சிவாகமங்களில் மந்திரசமஸ்கார தீட்சை எனவும் சொல்லப்படும். இராமருக்குத் தண்டகாரணியத்தில் அகஸ்திய மகாமுனிவர் இந்தத் தீட்சையைச் செய்து வைத்ததாகப் பதுமபுராணசிவகீதையிற் காண ப்படுகிறது. " இதோஹிதேவகீ சூதுமுகமந்யு ர தீக்ஷயத்" (உபமந்தியுமு நிவர் தேவகிநந்தனமாகிய கிருஷ்ணர்க்குப் பாசுபத தீட்சை செய்தனர்) எனப்பாரதத் திற்பெறப்படுகிறது. ஆகவே பரமாத்வையடைய இச்சையுள்ளார் எவரும் சிவ தீட்சையடைய வேண்டுமென்பதாயிற்று.

**13.** மரண தருமத்தையுடைய மனிதன் ஆன்ம சொரூபத்தைக் கேட்டு நன்றாகக் கிரகித்து, கர்மத்தால் நேர்ந்த சரீரத்தை வேறாக்கி, சூட்சுமமான பரமாத்மாவை அடைந்து அவன் தன் பிரீதிக்கு விஷயமானதை யடைந்து ஆனந்திக்கிறான். நசிகேதசுக்குப் பிரமமாகிய வீடு திறக்கப்பட்ட வாசற்படியுள்ள தாக நினைக்கிறேன்.'

**14.** (யமனே!) தர்மத்திற்கு வேறுபட்டதும், அதர்மத்துக்கு வேறுபட்டதும், காரணகாரிய மில்லாததும், இறப்பெதிர் விலாததுமாயுள்ள எதை நீர் பார்க்கின் றீரோ அதை யெனக்குச் சொல்லுக.

**15.** (நசிகேதசே) சர்வவேதங்களும் எந்தச் சொரூபத்தைப் பிர்திபாதிக்கின்றனவோ, சகல கர்மங்களும் எதைச் சொல்லுகின்றனவோ, எதை விரும்புகிறவர்கள் பிரமசரியத்தை யனுஷ்டிக்கிறார்களோ, அந்தச் சொரூபத்தை உனக்குச் சொல்லுகிறேன் இது ஓம். ‡

‡ ஈண்டு "ஓம்" என்பது சிவமெருமானையேயாம். ஸ்ரீருத்திரம் "ஓம்நம: சிவாய" எனவும், தியாநபிந்து "த்யாயே தோங்காரமீச்வரம்' எனவும், நிரு ஹிஹ்மோத்தரதாபிநி "ஓங்காரம் ஸர்வேச்வரம்" எனவும், அதர்வசிகை "ஓங் காரோவேதபர ஈசோவாசிவ ஏக்த்யேயா" எனவும், சரபம் "ஓம்மஹாக்ராய மகாதேவாய சூலினே' எனவும், பஸ்மோஜாபாலம் "ஓங்காரஸ்வரூபிணம் மகாதேவம்" எனவும், தைத்ரீயாருணசாகை நாராயணம்' சிவோமே அஸ்து ஸதாசிவோம்" எனவும் சுருதிகளனைத்தும் சுடர்விட்டொளிர்தளால் விளங்கும், அன்றியும் சிவபெருமானது சக்தியாரது திருநாமம்" உமா" அ×உ×ம் எனநிற்கற்பாலது வர்ண வியத்தியமாகிய எழுத்து மாறலான் உ×ம்×அ என நின்று "உமா" எனவாகிப் பிரணவமாக விளங்கும், அவரது திருக்குமாரர்களில் விநாயகக்கடவுளது கஜாநநக்காட்சியால் பிரணவஸ்வரூபம் இனிது பெறப்படும், இனி ஸ்கந்த மூர்த்தியை 'ஸுப்ரஹ்மண்யோம்-ஸுப்ரஹ்மண்யோம்-ஸுப்ரஹ்மண்யோம்" என்று முக்காற்கூறிச் சுருதி இளைப்பாறும், இனிக்காசி யிலிறக்கிறவர்கட்குச் சிவபெருமான் தாரகோபதேசம் செய்கிறார் எனவும், அது ஓங்காரமாகிய

பிரணவமெனவும் அதர்வசிரசும். ஜாபாலமும் முறையே "ஆத்மஜ்ஜோதிஸ்ஸக்ருதாவர்த்த ஏவ" என்னும் வசனத்தாலும், "அந்த்ரஹி ஜந்தோர் முமூர்ஷோ" என்னும் வசனத்தாலும் நன்கு பரிஷ்கரித்திருக்கின்றன. அவ்வுபதேசம் பெற்ற உயிர்கள் சிவரூபத்தை யடைகிறார்கள் என்பது சுருதி நிச்சயமாகையால் தாரகப்பிரணவமாகிய "ஓம்" சிவவாசகமெனல் சத்தியமா விற்று. “ஓம்” என்பது நாராயணனைக் குறித் திடாதோவெனின் குறித்திடாது. என்னை யெனின்? நிருஸிஹ்மோத்ரதாபிநி "அகாரம்ப்ரஹ்மாணம்" "உகாரம் விஷ்ணும்" "மகாரம்ருத்ரம்" ஓங்காஸர்வேச்வரம்” எனலால் உகாரவாச்சியன் ஓங்காரவாச்சியனாதல் துஸ்ஸாத்தியமாம்.

---

**16.** ஆகையா லிந்த வட்சரமே சிரேஷ்டம் விந்த அட்சரமே பிரமம், இந்த வட்சரத்தை யறிந்து எவனெதை யிச்சிக்கிறானோ அவனுக் கதுண்டாகிறது.

**17.** இந்த வட்சரமே சிரேஷ்டமான சாதனமானது இந்தட்சரமே பிரம்மபிராப்திக்குச் சாதனமானது, பரமாயுள்ளது, இத்தகைய சாதனத்தைத் தெரிந்து கொண்டு பிரமலோகத்தில் பூஜ்ஜியனாகிறான்.

**18.** சகலத்தையுமறியுந் தன்மையுடைய விவன் ஜனனமரணங்க ளற்றவன், முந்தியு முற்பத்தியில்லாதவன், நித்ய சாசுவதன், பழமையானவன்! இவன்) தேகம் கொல்லப்பட்டாலும் ஆத்மர் கொல்லப்படுகிறதில்லை.

**19.** (இவனைக்) கொல்லுகிறவன் கொல்ல நினைத்தானாகிலும், கொல்லப் பட்டவன் கொல்லப்பட்டதாக நினைத்தானாகிலும் அவ்விருவர்களும் (உண்மை) யறிந்தவர்களல்ல, இவன் (எப்போதும்) கொல்லப்படுகிறவனல்ல.

**20.** (பரம) ஆத்மா சூட்சுமத்தைவிடச் சூட்சுமமானது, ஸ்துலமானதைவிட ஸ்தூலமானது, இந்த ஜீவனின் இருதயகுகையில் வைக்கப்பட்டிருக்கிறது, ஆசையற்றவன் கரணங்களின் சாந்தியால் (பரம) ஆத்மாவின் மகிமையைப் பார்க்கிறான், சோகமற்றவனாகிறான்.

**21.** சலிக்காமலிருந்து வெகு தூரத்திற்குப் போகிறது, படுத்துக் கொண்டு எங்கும் போகிறது சுகதுக்கங்களின் நடுவிலிருக்கும் அந்தத் தெய்வத்தை, என்னைக் காட்டிலும் வேறான எவனறிய யோக்கியனா வான்.

**22.** (கர்ம) சரீரமில்லாததாயும், ஸ்திரமில்லாத சரீரங்களில் இருப்பதாயும், $ சர்வவியாபகமாயுமுள்ள (பரம) ஆத்மாவைத் தெரிந்து கொண்டு புத்திமான் துக்கப்படுகிறதில்லை.

$ பரமாத்மா சகலத்திலும் அந்தர்யாமியாயிருப்பதால் ஜீவன் விஷயமாய் அவருக்குப் போக்கு வருத்து கூறியது ஔபசாரிகமாம்.

**23.** இந்த (பரம) ஆத்மா வெகுவேதங்களைப் படிப்பதினால் அடையத் தகுந்ததல்ல, சொந்தபுத்தியா லடையத்தகுந்ததல்ல, விசேஷ சாஸ்திர சிரவணத்தால் அடையத்தகுந்ததல்ல, எவனையிவர் விரும்புகின்றாரோ அவனாலவர் அடையப்படுகின்றனர்.

**24.** கெட்ட நடவடிக்கையுள்ளவன், (பரம) ஆத்மாவையடைய மாட்டான், இந்திரியாதிகளை யடக்காதவன் அடையமாட்டான், பல விஷய வியாபார முடையவன் அடையமாட்டான், மனதை நிக்ரகம் செய்யாதவன் அடையமாட்டான் (பசுபாச) உபாசனையாலு மடைய மாட்டான்.

**25.** எந்தப் பரமாத்மாவிற் பிராமணனும் ஷத்திரியனும் (அதாவது ஸ்தாவரஜங்கமான சகலஜகத்தும்) அன்னமாவதோ (அழிக்கக் கூடுமோ) எந்தப் பரமாத்வாவிற்கு மிருத்தியு § வியஞ்சனமோ (நாச மாக்கக் கூடுமோ) அந்தப் பரமாத்மா எங்ஙன மிருக்கிறதோ அது இத்தகைய தென்று எவனறிவான்.

§ பல்லாயிரங்கோடி காலர்களையுண்டேப்பமிடும் காலகாலராம் பரமாத்மாவாகிய உருத்திரருக்கு மிருத்யுவியஞ்சனமாக விருக்கவும், அத்தகைய உருத்திரரை அபூஜ்யராக்கக்கருதி சாமான்யமிருத்யுவை உருத்திரரெனக்கூறிய மத்துவர் வியாக்கியானம் "ஸர்வேதேவா" "அஹமேவப சூநாமதிபதி" எனும் வேதவாக்கியங்கட்கு மாறுபட்டு அபூஜ்யமாயொதுங்கிய தென்க.

## 1 - வது அத்தியயம் 3 - வது வல்லி மந்திரம் - 1.

1. புண்ணிய ஸ்தானமாகிய மேலாயசரீர குகையிலே பிரவேசித்தனவாய், கன்மபலத்தைத் துய்ப்பனவாயுள்ள இருவஸ்துகள் * சாயை யும் ஒளியும் போல வேறாயுள்ளன வென்று, கிரகஸ்தர்களாயும் பஞ் சாக்னி திருணாசி கேதாக்னி யனுஷ்டிக்கிற பிரமஞானிகள் கூறுகின்றனர்.

* இரு வஸ்துக்களாவன பரமான்மாவும், ஆன்மாவுமாம்.

**2.** எவன் யாகஞ்செய்கிறர் வர்களுக்கு ஆதாரனாக விருக்கிறானோ † எது விகாரமற்ற பரப்பிரம்மமோ, சம்சார கடலைத்தாண்ட இச்சிக்கிறவர்கட்குப் பயமற்றகரையோ அது நாசிகேதாக்கினியா லடையப்படும் அப்பரமாத்மாவை யுபாசிக்கிறதற்குச் சமர்த்தர்களாயிருக்கிறோம்.

† யாகத்திற்கு ஆதாரனார்? என்பது விசாரம். சிவபெருமானே யென் பது தீர்வு, எங்ஙனமெனின்? "காதபதிம் மேதபதிம் ருத்ரம் ஜலாஷபேஷஜம்" (பாட்டுக்கு அதிபதியும், இன்பத்தைக் கொடுக்கும் ஔஷதங்களையுடைய யாகத்திற்கு அதிபதியுமானவர் உருத்திரர்) எனவும்," ஆவோராஜாகா மத்வஸ்யருத்ரம்". (யஞ்ஞுத்துக்கு இராஜாவாக உருத்திரரைநாடுக) எனவும் வரும் ருக்வேத சுருதிகளாலும், "ஸோமே நாராதயேததேவம் ஸோமம்ஸோம விபூஷணம்" (சோமபூஷணரும் சோமருமாகிய தேவரைச் சோமத்தினாலே வழிபடுக) எனவும் வரும் ஸ்மிருதியானும் அறிக.

அன்றியும், "வாஜச்சமேப்ரஸவச்சமே" "தாதாசமே விஷ்ணுச்சமே" (எனக்கு அன்னம்வருக எனக்கு அனுமதிவருக, எனக்குத்தாதாவருக எனக்கு விஷ்ணுவருக) எனவரும் யசுர்வேத சுருதிகளால், அன்ன முதலிய வஸ்துகளும், விஷ்ணு முதலிய தேவர்களும் கொடுக்கப்படும் பொருள்களாகக் கூறப்படுதலான், பாரிசேடப் பிரமாணத்தாற் சிவபிரான் சமஸ்தகன்ம பலன்களையும் கொடுப்பவராகச் சிந்திக்கின்றது, அதுபற்றிச் சிவபிரானே சமஸ்தயாகங் களிளும் ஆராத் திக்கற்பாலரும், சமஸ்தபயன்களையும் கொடுப்பவருமாகின்றனர்.

---

3. ஜீவனை யஜமானனாகவறி, சரீரத்தையே இரதமாகவறி, புத்தியைச் சாரதியாகவறி, மனதைக் கயிரு கவறி.

4. வித்துவான்கள் இந்திரியங்களைக் குதிரைகளாகச் சொல்லு கிறார்கள், சப்தாதிவிஷயங்களை மார்க்கங்களாகச் சொல்லுகிறார்கள், இவைகளுடன் கூடின ஆத்மாவைப் புசிக்கிறவனென்று சொல்லுகி நார்கள்.

5. விவேகியான சாரதி எந்த புத்தியாகிற சமாதானமடைந்த மனதுடன் எப்போதும் (கூடியிருக்கிறானோ அவனுக்கு இந்திரியங்கள் சாரதியின் நல்ல குதிரைபோல வசியமாக வாகின்றன.

6. எந்தப் புத்தியென்னுஞ் சாரதி அவிவேகியாக விருக்கிறானோ, சமாதானமடையாத மனதுடன் எப்போதும் (கூடியிருக்கி றானோ) அவனுக்கு இந்திரியங்கள் சாரதிக்குக் கெட்டகுதிரைகள் போலச் சுவாதீனப் படாதவைகளாக (இருக்கின்றன.)

7. எந்த இரதிகன் விவேகாகிதனாகியும், பனோநிக்கியக மில்லா தவனாயும், எப்போதும் அபரிசுத்தனாயும் இருக்கிறானோ அவன் பரம பதத்தை யடைகிறதில்லை. (ஜனன மரணமாகிய) சமுசாரத்தையடைகிறான்.

**8.** எவனானால் புத்தியாசிய சாரதியுடையவனும், சமாதான சித்தமுடையவனும், எப்போதும் பரிசுத்தனு மாகிறானோ அவன் எந் தஸ் தானத்திலிருந்து மறுபடியும் பிறக்கமாட்டானோ அந்தஸ்தான த்தை யடைகிறான்.

**9.** எவன் புத்தியாகிய சாரதியை யுடையவனாயும், ஏகாக்கிற சித்தமுடையயுைம் இருக்கிறானோ அவன் சம்சார கரையாகிற விஷ் ணுவினுடைய ‡ சிரேஷ்டமான ஸ்தானத்தை யடைகிறான்.

---

‡ ஈண்டுக்குறித்த விஷ்ணு எனும்பதம் சிவபெருமானையே குறிக்கும். என்னையெனின்? விளக்கு தும். விஷ்ணு = வியாபகம் - வியாபகமாவார் நாராய ணரா? அல்லது சிவபெருமானா? எனின், நாராயணரை அதர்வசிரசு" நகார ணர்" எனவொதுக்கி, நாராயணோப நிஷத்து " தியர்தா " எனத்தீர்மானித்து, நிராலம் போநிஷத்து " ப்ரஹ்மவிஷ்ண்வீசாநேத்ராதீநாம் நாமரூபத்வாராஸ்தூ லோ ஹமித்யத்யாஸவசாஜ்ஜீவ" எனஜீவர்களி லொருவராய் விளக்கி, பைங்க ளோபநிஷத்து" ஸ்தூலபாலகோ விஷ்ணுப்ரதாந புருஷோபவதி" (சகலஸ் தூலத்தையும் இரட்சிக்கும் பிரதான புருஷன் விஷ்ணு) எனப்பிரகிருதிக்கு ரிய கர்த்தாவெனத் தாபித் திருத்தலின், நாராயணராகிய விஷ்ணுவின் வியாபகம் 23 - தத்துவங்களடங்கிய பிரதிஷ்டாகலாசக்கரம் வரையில் ஆனதால், இவர் வியாபகம் ஏகதேச வியாபகமாம். சிவபெருமானோவெனில் - 36 - தத்துவங்களடங்கிய சாந்தியாதீதகலா சக்கரத்தைக் கடந்தவராகலின் சிவபெருமானே சர்வவியாபகராம், இங்ஙனமாயின் சிவபெருமானை இவ்வுபநிடதம் விஷ்ணு எனும் பதத்தாலழைத்த தென்னையெனின், சிவபெருமானின் நாமாட்டகத்துள் விஷ்ணு எனும்பதமொன்றாகலினென்க. இவ்வுண்மை "லிவோ மகேஸ்வரச்சைவருத்ரோ விஷ்ணுபிதாமகா' எனும் வாயுசங்கிதை பூர்வபாகத்திற்காண்க. அன்றியும் மந்திரத்திற்குறித்த சம்சாரகரையைக் கடக்கிறதற்குச் சிவபெருமானே இலக்காமன்றி வேறுதேவரன்று "தஸ்மாத்ஸர்வாந்பரித்யஜ் யோந்விஷ்ண்வாதிகாந்ள ராசிவ ஏவஸ்தாத்யேயஸ்ஸர்வஸம்ஸாரமோசகா" (சமுசாரதுக்கதாசமுத்திப் பிராப்தியின் பொருட்டு விஷ்ணு முதலிய சர்வ தேவர்களையும் விட்டு எஞ்ஞான்றும் தியேயனாகவுள்ள சிவனையே தியானிக்க வேண்டும்) எனும் அதர்வணவேத சரபோபநிஷத்தாற் காண்க.

---

**10.** இந்தியங்களுக்கு மேல் (விஷயம்) பொருள்கள், பொருள்களுக்கு மேல் மனசு, மனசுக்கு மேல் புத்தி, புத்திக்குமேல் ஆன்மாவாகிய மகான் (மகத்து) வேறுபா

**11.** மகத்துக்கு மேல் அவியக்தம், அவியக்தத்திற்குமேல் புருஷன், புருஷனுக்குமேல் யாதுமில்லை, அது எல்லை, அதுபரமாகியகதி.

12. இந்தப் புருஷனாகிற (பர)மாத்மா சமஸ்த பூதங்களிலும் மறைபட்டதாய் பிரகாசிக்கிறதில்லை, ஏகாக்கிரமாயும், சூட்சுமமாயு மிருக்கிற புத்தியால், சூட்சுமமான அர்த்தத்தை அறியும் கடாவமுள்ளவர்களால் அறியப்படுகின்றது.

13. விவேகி கன்மேந்திரியங்களையும், ஞானேந்திரியங்களையும் மனதி லொடுக்க வேண்டும், மனதைப் புத்தியிலொடுக்க வேண்டும், புத்தியை ஆன்மாவி லொடுக்கவேண்டும், ஆன்மாவைச் சாந்தமாகிய பரமாத்மாவி லொடுக்கவேண்டும்.

14. அஞ்ஞான நித்திரையிலிருந்து எழுந்திருங்கள், அவித்தை யினினின்றும் விழித்துக் கொள்ளுங்கள், ஆச்சாரியர்களையடைந்து தெரிந்து கொள்ளுங்கள், ஞானிகள் ஆத்மதத்துவத்தைச் சிரமப்பட் டுச் சம்பாதிக்கத்தகுந்த மார்க்கமாகச் சொல்லுகிறார்கள், (அம்மார்க்கம்) கத்தியினுடைய தீட்சண்யமான முனைபோன்றதால் அதுகடக்கத் தகுந்ததன்று.

15. சப்தமிலதாயும், பரிசமிலதாயும், ரூபமிலதாயும், அவ்வியமாயும், இரசமிலதாயும், நித்தியமாயும், காரணமில்லாததாயும், காரிய மற்றதாயும், மகத்துக்கு மேலானதாயும், வேறுபடாததாயு மிருப்ப தொன்றை அறிந்து மரணவாயினின்றும் வீடுறுகின்றனன்.

16. நசிகேதசால் அடையப்பட்டதும், யமனால் அடையப்பட்டதும் பிராசீனமாயிருக்கிற கதையைச் சொல்லியும் கேட்டும் புத்தி மானானவன் ப்ரமலோகத்தில் பூஜ்ஜியனாகிறான்.

17. எவன் சிரேஷ்டமாயும், இரகசியுமாயுமிருக்கிற இக்கிரந் தத்தைப்பிராமணசபையிலாவது, சிராத்தகாலத்திலாவது பரிசுத்தனா விருந்து கேட்கச் செய்கிறானோ அச்சிராத்தம் அநந்தபலத்தின் பொருட்பட்டுச் சமர்த்தமாகிறது, சமர்த்தமாகிறது.

## 2 - வது அத்தியாம், 4 - வது வல்லி, க - வது மந்திரம்.

1. சுயம்புவான (பரமேஸ்வரன்) வெளியில் பிரவர்த்திக்கிற இந்திரியங்களைச் சிருஷ்டித்தார். ஜீவன் அக்காரணத்தால் வெளியிலுள்ளவை களையே பார்க்கிறான், அந்தராத்மாவைப் பார்க்கிறதில்லை. விவேகியா னவன் மோட்சத்தை யிச்சிக்கிறவனாயும், விஷயங்களினின்று திரும்பினவனாயும் அந்தராத்மாவைப் பார்க்கிறான்.

2. பாலர்கள் (அவிவிவேகிகள்) வெளியிலுள்ள விஷயங்களை அனுசரிக்கிறார்கள். அவர்கள் வியாப்தமான மிருத்யுவின் பாசத்தை யடைகிறார்கள், விவேகிகள்

மோட்சத்தைச் சாசுவதமென்று தெரிந்து சம்சார மண்டலத்திலிருக்கிற அநித்தியபதார்த்தங்களை விரும்புகிறதில்லை.

3. எந்தப் பரமாத்மாவால் (ஜீவன்) ஆகாரத்தையும், இரசத்தையும், கந்தத்தையும், சப்தங்களையும், ஸ்பரிசங்களையும், சமபோகக் தையும் நன்றாய் அறிகிறானோ, அவனால் இந்த லோகத்தில் அறியப் படாது மிச்சமாயுள்ளதுவே அந்த பரமாத்மா.

4. ஸ்வப்நத்தி லேற்படும் வஸ்துக்களையும், ஜாக்கிரத்திலேற் படும் வஸ்துக்களையும் எந்தப் பரமாத்மாவால் (ஜீவர்) பார்க்கிறானோ, அந்த வியாபகமாயும், விபுவாயுமுள்ள பரமாத்வை ஞானி தெரிந்து கொண்டு துக்கிக்கிறதில்லை.

5. எவன் இந்தக் கர்மபலத்தை யனுபவிக்கிற ஜீவ ஆத்துமா வையும், சமீபத்திலிருக்கிற முக்காலத்துமுள்ள ஈசுவரனையும் அறிக றானோ (அவன்) இங்ஙன மறிந்த பிறகு தன்னை இரட்சித்துக் கொள்ள மாட்டான். (இறைவனிரட்சிப்பன்)

6. எவன் சலசகிதபஞ்ச பூதங்கட்கும் முன்பிரார்த்துவ தவத் திற்படி பிறந்தனனோ, எவன் இருதய குகையைப் பிரவேசித்துப் பூகங்களுடனிருக்கிறானோ (ஆன்மாவாகிய) அவனை யறிந்தவனே பிர மத்தையறிந்தவனாகிறான். *

---

* இந்த மந்திரத்தில் சிவசப்தத்தை வலிய வெடுத்துக்கொண்டு" எந்தப் பகவான் பிரமாவைச் சிவனுக்கு முன்னுண்டு பண்ணினோ "என மத்வாச்சாரியர் வரைந்து வைத்தனர்." ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ராஸ்ஸம் ப்ரஸூயந்தே நகாரணம் காரணந்துத்யேஸஸ்ஸர்வைச்வர்ய ஸம்பக்கஸ்ஸர்வேச்வரசம்புரா சாசமத்யக இதி" (பிரமவிஷ்ணுருத்ரேந்திராதிகள் பிறப்பிக்கப்படுகிறார்களென்றும், அதனால் அவர்கள் சகத்காரணரல்லரென்றும், சர்வைசுவரிய சம்பன் னனும், சகலஜகதீசனும், அந்தருபாசனாவிதிகளால் தியானிக்கப்படுபவனும், தகராகாசமத்யகதனாகிய சம்புசப்தவாச்யனுமாகிய பரமசிவனே ஜகத்காரண வஸ்து) என்று அதர்வசிகோபரிஷத் பிரதிபாதகமான வாக்கியத்தை அவர் கண்டும் கேட்டுமிராரெனவூகிக்கின்றனம்.

---

7. கர்மபலத்தைப் புசிக்கிற சீவன் பிராணனோடு கூடவிருக்கிறவன், சர்வதேவதா ரூபமானவன். பிருதிவி முதலிய பூதங்களுடன் கூடினவன் இருதயபுண்டரீகத்தின் துவாரத்திலிருக்கிறவன், இதுவே யறியத்தக்கது.

8. ஜாதவேதஸ் எனப் பெயருள்ள அக்கினி அரணிக்கட்டைகளில் வைக்கப்பட்டிருக்கிறது. கர்ப்பிணி ஸ்திரீகளால் கர்ப்பம் போல நன்றாகப் போஷிக்கப் படுகிறது, பிரதிதினம் சாக்ர சீலர்களாயும் அவிசை யுடையவர்களாயு மிருக்கிற மனிதர்களால் துதிக்கத்தக்க தாக விருக்கிறது. அதுவே யறியத்தக்கது.

9. எதினின்றும் சூரியனுதிக்கிறானோ, எதில் அஸ்தமனத்தை படைகிறானோ அதனைச் சகலதேவர்களு மடைகிறார்கள், அவனை யொருவனும் அதிக்கிரமிக்கிறதில்லை, அதுவே யறியத்தக்கது.

10. எந்தப் பரமாத்மா இந்த லோகத்தினரிடத்து (அந்தர்) ஆத்மாவாக விருக்கிறதோ அதுவே லோகாந்தரத்தி லிருக்கிறவர்கட்கும் (அந்தர்) ஆத்மாவாக விருக்கிறது. பேதமிருப்பதாக வெவன் பார்க்கிறானோ அவன் சம்சாரத்திற்குமேல் சம்சாரத்தையடைகிறான்.

11. இந்தப் பரமாத்மா மனதினாடே யடையத்தக்கது, இதில் கொஞ்சமும் பேதமில்லை, எவனிதில் பேதம்போல் பார்க்கிறானோ அவன் மிருத்யுவுக்குப் பின் மிருத்யுவையடைகிறான்.

12. சென்றகாலம் வருங்காலம் இவற்றிற்கு ஈசானராதலின் கட்டைவிரல் பரிமாணமுள்ள புருஷன் இதயமத்தியில் நிற்பாராயினன், இதை யறிந்தவன் தன்னைக் காத்துக்கொள்ள விச்சிக்கிறதில்லை, உன்னால் கேட்கப்பட்ட வஸ்து இதுவே, இவை முதலிய வாக்கியங்களால் கூறப்பட்ட குணங்களுடையதே.

13. மூன்று காலத்துமுள்ள ஈசானரான புருஷர்கட்டை விரலளவுள்ள † புகையில்லாத தேஜஸ் போலிருக்கிறான். அவனே யிப்போதும் அவனே நாளையதினமு மிருக்கிறான், அதுவேயறி.

---

† ஆன்மாவின் இருதயகுகையில் அங்குஷ்ட பிரமாணமாயுள்ளவர் சிவபெருமானே யென்பதற்கு இந்த மந்திரத்தில் சிவபெருமானை ஈசசப்தத்தால் குறிக்கப்பட்டிருக்கிறது. ஈச்சப்தம் "சம்பூரீச: பசுபதிச்சிவ:" எனும் நிகண்டாற் சிவபெருமானுக்கேயுரியதென்பது ஸ்பஷ்டம். சிவபெருமான் அபரிச்சின்னராய்னும் அவரை யங்குஷ்டவளவினராகக் கூறினமை உபாசகனுடைய இதயத்தைய பேட்சித்தேயாம், மனிதரிதயம் எத்துணைப் பிரமாணமுடையதோ அத்துணைப் பரிச்சின்னமாகிய ரூபத்தையே பரமேஸ்வரன் அவரவர்கள் உபாசன சித்தியின் பொருட்டுக் கொண்டருளுவர். ஆகவே தகராகாசமத்யகதனாயுள்ளவர் சிவபெருமானென சம்புராசமத்யக இதி" என அதர்வசிரசு அருளியது.

---

14. பர்வதங்களின் உச்சியில் பெய்யுமழை விழுந்தோடுகிறதோ அங்ஙனம் மனிதனில் அந்தர்யாமியா விருக்குந் தன்மை வெவ்வேறிடங்களில் வெவ்வேறாக இருக்கிறதாகப் பார்க்கிறவன் பர்வதத்தின வெள்ளம் அனேகபள்ளங்களில் விழுவதுபோலச் சம்சார பள்ளங்களில் விழுகிறான்.

15. எங்ஙனம் சுத்த சலத்தில் சேரும் சுத்தசலம் அதுபோலாகிறதோ அங்ஙனம் மனனம் பண்ணும் புருஷனுடைய ஆத்மாவும் பரமாத்ம ஞானத்தால் சுத்தி யடைவன்.

## 2 - வது அத்தியாம், 5 - வது வல்லி, 1 - வது மந்திரம்.

1. நித்தியஞான முள்ளவனும், பிறப்பில்லா தவனுமான எவனுக்குப் பதினொரு துவாரங்களுள்ள * பட்டினம் போல (இருக்கிறதோ) அதைப் பகுத்தறிந்து துக்கங்களினின்றும் விடுபட்டவனாய் முத்தியை யடைகிறான். நீகேட்டது இதுவே.

* கழுத்துக்கு மேல் எழுதுவாரம், நாபியுடன் கீழ மூன்று துவாரம், பிரமரந்திரம் ஒன்று ஆகபதினொன்று.

2. கிரீஷ்மருதுவி லிருக்கும் சூரியனும், ஆகாசத்திலிருக்கும் வாயுவும், வேதியிலிருக்கும் அக்கினியும், வீட்டிற்கு வந்திருக்கும் அதிதியும், மனிதரிடத்திலுள்ள ஆத்மாவும், தேவரிடத்துள்ள ஆத் துமாவும், வேதமும், ஜலவஸ்துக்களும், பூமியிலுள்ள வஸ்துக்களும், யஞ்ஞவஸ்துக்களும், மலையிலுள்ளவைகளும் ஆகிய இவையெல்லாம் பிரமத்தை யந்தரியாமியாக வுடையன.

3. (எந்த பரமாத்மா) பிராணவாயுவை உயரவரும்படி செய்கி றானோ? அபானவாயுவைக் கீழேவரும்படி செய்கிறானோ? இருதயத்தில் இருக்கிற குட்டையான † (அங்குஷ்ட பிரமாணமாயுள்ள) அந்தப் பரமாத்மாவைச் சமஸ்ததேவர்களும் உபாசிக்கிறார்கள்.

† இருதயகுகையில் பரமாத்மா "அங்குஷ்ட பிரமாணமாகக் குட்டையாய் எழுந்தருளியிருத்தலால், அங்குஷ்ட மென்பதற்கு" வாமகம் என்னும் பதம் இம்மந்திரத்தில் பிரயோகித்திருக்கவும், வாமா சப்தத்திற்கு மத்துவா சாரியர் "அழகுள்ள ஸ்தீரீகளை நியமனம் செய்கிற இந்த ஹரியை" என்றருத்தஞ் செய்தனர். பிருகு முனிவராற் சாபகிரஸ்தராகி, காசிபனுக்கும் அத்திரிக்கும் யோனிவாய்ப் பட்டு தித்து, மாவலியை வஞ்சித்துக் கொல்லுதற்காக வாமனரூபமாய்ச் சென்று மூவடிமண்யாசித்துப் பின்னர் வஞ்சனையாய் விக்கிரமவடி வெடுத்தபோது, வைரவமூர்த்தியால் சிட்சிக்கப்பட்டுத் தமது கங்காவத்தையிழந்த மூர்த்தியாகிய வாமனனைத் தமது ஞாபகத்திற் கொண்டு வந்து இங்கனம் எழுதிவைத்தனர் போலும்.

4. உபாசகனான தேகிக்குச் சரீரத்திலிருக்கும் போதாவது, தளர்ச்சியடைந்த தேகத்தை யுடைத்தா யிருக்கும் போதாவது, மா ணத்தை யடையும் போதாவது கிருதக்கிருத்தியனா யிருப்பதால் செய்யவேண்டிய தொன்றுமில்லை, நீ கேட்டது இதுவே.

5. எந்த மனிதனும் பிராணவாயுவால் ஜீவிக்கிறதில்லை, அபானவாயுவால் ஜீவிக்கிறதில்லை. ஆத்துமாவிருக்கும் போது பிராணாபானன் ஆசிரயித்துக் கொண்டிருக்கின்றன. பிராணாபான வியதிரக்தமான பரமாத்மாவினாலேயே ஜீவிக்கிறார்கள்.

6. ஓ நசிகேதசே! ஆச்சரியம், உனக்கு இரகசியமானதும், புராதனமுமான பிரமத்தைச் சொல்லுகிறேன், மரணத்தையடைந்து ஆத்துமா எப்படியாகிறதோ (அதைக்கேள்).

7. (சில) இதர தேகாபிமான மூடர்கள் கர்மத்தை யனுசரித்தும், ஞானத்தை யனுசரித்தும் சரீரத்தைத் தரிக்கும் பொருட்டு யோனித்துவாரத்தை அடைகிறார்கள், வேறு சிலர் தாவரபாவத்தை யடைகிறார்கள்.

8. எந்த விந்த புருஷன் பிராணாதிகள் தூங்கிக்கொண்டிருக் கையில் பிரதிகோரிக்கைகளையும் உண்டு பண்ணுகிறவனாக விழித்துக் கொண்டிருக்கிறானோ அதுவே சுத்தமானது. அதுவே நாசாகிதமாகச் சொல்லப்படுகிறது. சகல லோகங்களும் அப்பிரமத்தி னிடத்தில் ஆசிரயித்துக் கொண்டிருக்கிறார்கள், அதை ஒருவனும் அதிக்கிரமிக்கிறதில்லை, நீ கேட்டது இதுவே.

9. ஒரேயக்கினி எவ்வாறு உலகத்தில் பிரவேசித்து ஒவ்வொரு ரூபத்தை யுத்தேசித்து அதனதன் ரூபமாக ஆகிறதோ? அவ்வாறு சர்வபூதங்களிலு முள்ள அந்தராத்மா ஒருவனாயிருந்தும் ஒவ்வொரு ரூபத்திலும் அந்தரியாமியானான்.

10. ஒன்றானவாயு எவ்வாறு தேகத்திற் பிரவேசித்துத் தேகந்தோறும் அதனதன் ரூபமாக ஆனதோ யவ்வாறே சர்வபூதங்களிலு முள்ள அந்தராத்மா ஒவ்வொரு தேகத்திலும் அந்தரியாமியாயினான், வெளியிலு முள்ளான்.

11. சூரியன் எவ்வாறு சகலலோகத்திற்கும் நேத்திரமாய், நேத்திர சம்பந்தமான தோஷங்களுடன் சம்பந்த மில்லையோ அவ்வாறு ஏகமாயும் பாகியமாகியும் சகலபூதங்களிலு முள்ள அந்தராத்மா பிரபஞ்ச சம்பந்தமான துக்கத்துடன் சம்பந்தப் படுகிறதில்லை.

12. எந்தப் பரமாத்மா ஒன்றான தன்னை (உலகநியமனத்தின் பொருட்டு) வெவ்வேறாகச் செய்கிறானோ அத்தகைய இருதயாகாசத் தில் வசிக்கும் அந்தராத்மாவை எந்த விவேகிகள் பார்க்கிறார்களோ? அவர்கட்கு நிரந்தரமான சுகம் (உண்டாகிறது) மற்றையர்க்கு உண்டாகிறதில்லை.

**13.** எந்தப் பரமாத்மா நாசமடைகிறவைகளுக்குள் நாசமற்றவனோ? சேதனங்களுக்குள் சேதனனோ? ஒருவனாயிருந்தும் அனேகர்களுக்கு இச்சைகளைக் கொடுக்கிறானோ அத்தகைய இருதய குகையிலுள்ள அந்தராத்மாவை எந்த விவேக்கள் அனுபவிக்கிறார்களே? அவர்கட்கு நிரந்தரமானசுகம் உண்டாகிறது மற்றவர்கட் குண்டாகாது.

**14.** எது இத்தகையதென்று சொல்லத்தகாததும் மேலானதுமான பரமசுகமோ அதை இத்தகையதென்று (விவேகிகள்) நினைக்கிறார்கள். அது பிரகாசிக்கிறதா? ஸ்பஷ்டமாய் விளங்குகிறதா எங்கனந் தெரிந்து கொள்வேன் என்றனன் நசிகேதசு

**15.** அந்தப் பிரமத்தினிடத்தில் சூரியன் பிரகாசிப்பதில்லை, சந்திரன் நட்சத்திரம் பிரகாசிப்பதில்லை, மின்னல் பிரகாசிப்பதில்லை. இந்த அக்கினி எங்கனம் பிரகாசிப்பன், சகலமும் பிரகாசரூபமான பிரமத்தையே அனுசரித்து அதனுடைய காந்தியால் சர்வமும் பிரகாசிக்கிறது.

மணவழகு.

சித்தாந்தம் - 1915 ஹு
ஜனவரி, பிப்ரவரி, மார்ச், ஏப்ரல், மே, மீ